இலாகாவையும் நாம் கலந்து ஆலோசித்துத்தான் இந்த "ப்ரையாரிட்டி லிஸ்டு" தயாரித்திருக்கிறோம். எது அவசியம் என்பதையும் எதை முதலிலே எடுத்துக்கொள்ளக்கூடும் என்பதையும் பார்த்துத்தான் லிஸ்டு தயாரிக்கப்பட்டிருக்கிறது.

*School-going children in the Coimbatore district*

* 181 *Q.*—Sri P. G. MANICKAM: Will the Hon. the Minister for Finance be pleased to state the number of children under each age-group 6–11 and 11–14 and the number admitted in schools in the Coimbatore district in 1956–57?

The Hon. Sri C. SUBRAMANIAM: Total number of children in Coimbatore district in 1956–57:—

(*a*) Under age group 6–11 = 450,955.

(*b*) Under age group 11–4 = 236,214.

Number of children admitted in schools in 1956–57—

(*a*) Under age group 6–11 = 31,975.

(*b*) Under age group 11–14 = 8,101.

**Sri P. G. MANICKAM:** கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் மிக மிக பிற்போக்கு நிலைமையிலே இருக்கிறது என்பது சர்க்கார் வெளியிட்டுள்ள வெள்ளையறிக்கையிலிருந்து தெரிகிறது. இந்த ஜில்லாவில், 500 ஜனத்தொகைக்கு மேற்பட்டுள்ள நூற்றுக்கணக்கான கிராமங்களும், குக்கிராமங்களும் இன்னும் பள்ளிக்கூடங்கள் இல்லாமல் இருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்களைத் திறந்து, அங்குள்ள மாணவர்கள் படித்து முன்னேறி வருவதற்கு வசதி செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** கனம் அங்கத்தினர் அவர்கள் மூன்று நான்கு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நிலையைப்பற்றி பேசுகிறார்கள் என்று நினைக்கிறேன். 500 ஜனத்தொகையுள்ள நமது ராஜ்யத்தில் உள்ள எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் வைத்தாய்விட்டது. கோயமுத்தூர் ஜில்லா மட்டும் விலக்கு அல்ல. ஒரு காலத்தில் கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் பிற்போக்காக இருந்தது வாஸ்தவம். ஆனால், இப்பொழுது ரொம்ப முற்போக்கு அடைந்திருக்கிறது.

*Secondary grade teachers*

* 182 *Q.*—Sri N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the secondary grade teachers employed in elementary schools are allowed full-fee concession for their children; and

(*b*) if so, why such teachers are allowed only half-fee concession for their children when employed in high schools?

The Hon. Sri C. SUBRAMANIAM: (*a*) The children of secondary grade teachers employed in elementary schools get full-fee concession up to Form VI as such teachers enjoy comparatively a lower status in pay, etc.